# 101

## ஊர்வசி

வழக்கம் போல் நான் ஒருநாள் ஸூர்யோபஸ்தானம் செய்துவிட்டு திரும்பி வந்து கொண்டிருக்கும்பொழுது ஆகாச வீதியில் ஸ்திரிகளின் கூக்குரல் போல் சப்தம் என்காதில் விழுந்தது. உடனே தேரை அந்த திக்கில் நடத்தி என்ன வென்று பார்த்தேன். ரம்பை மேனகை முதலிய அப்ஸரஸீகளாயிருக்கக் கண்டேன். விசாரித்ததில் தாங்கள் ஊர்வசியுடன் குபேரனுடைய மாளிகையிலிருந்து திரும்பிவந்துகொண்டிருக்கும் போது அந்த இடத்தில் கேசி என்னும் அஸுரென் அவர்களைத் தாக்கி ஊர்வசியை சித்திரலேகையுடன் தூக்கிக்கொண்டு போய்விட்டதாகத் தெரிந்தது. அவர்களுக்கு ஸமாதானம் சொல்லிவிட்டு அவர்கள் குறித்த திக்கை நோக்கி வேகமாக ரதத்தை விட்டுக்கொண்டு சென்று, அவனைத் தோற்கடித்து, ஊர்வசியையும் சித்ரலேகையையும் மீட்டு என் ரதத்தில் வைத்துக்கொண்டு திரும்பினேன். பாவம், ஊர்வசி மிகவும் பயந்து போய் மூர்ச்சையாயிருந்தாள். சித்ரலேகை ஒரு பக்கத்தில் உட்கார்ந்து அவளைத் தாங்கிக்கொண்டிருந்தாள். நான் மற்றொரு பக்கத்தில் இருந்து எப்பொழுது மூர்ச்சை தெளியும் என்று கவனித்தேன். அவளுடைய அழகைப்பற்றி கேள்விப்பட்டிருந்தேன். ஆனால் அப்பொழுது தான் நெருங்கி ஸாவகாசமாக அவள் அழகை கவனிக்க ஸந்தர்ப்பமேற் பட்டது. என்ன ரூபலாவண்யம்! அவள் மார்பு இன்னும் துடித்ததென் பதற்கு அடையாளமாக அவள் அணிந்திருந்த முத்துமாலை சலித்தது. மறுநிமிஷம் பிரக்ஞை வந்துவிட்டது.

'சித்ரலேகா! நம் தோழிகள் எங்கே?' என்றாள்.

'ஊர்வசி, பயப்படாதே, நாம் அங்குதான் போய்க் கொண்டிருக் கிறோம். இதோ உன் பக்கத்திலிருக்கும் இந்த மஹாராஜன் – புரூரவ சக்ரவர்த்தி–நம்மை அந்த துஷ்டனிடமிருந்து மீட்டுவிட்டார். அவர் செய்த உபகாரத்திற்கு இந்த விஜயனுக்கு நீ உபசாரம் சொல்'என்றாள் சித்ரலேகை 'நீ சொல்லு' என்றாள் கட்டழகி.

*மணிக்கொடி, 13.05.1934, 03.06.1934, 01.07.1934.*

இக்கட்டளையில் தன் மனதை ஒரு நொடியில் அறிந்து பளிச்சென்று வெளிக்காட்டிவிட்டாள். இப்போலி நாணம் என் ஹிருதயத்தில் கதவைத் தட்டித் திறக்கச் சொல்லிற்று அதன் 'பிகு' என் மனதைக் கொள்ளை கொண்டது.

ரதம் ஹேமகூட சிகரத்தில் வந்து இறங்கின பொழுது ஒரு நொடியில் சக்கிரம் இறங்கியதால், அந்தப்பக்கம் சாய்ந்தது. ஆதனால் ஊர்வசியின் சரீரம் லேசாக என்மேல் சாய்ந்தது. ஏக காலத்தில் இருவர் உடலும் சிலிர்க்க உணர்ந்தோம். அம்மயிர்க்கூச்சு மன்மதனின் அங்குரார்ப் பணமே போலிருந்தது.

'சற்று விலகிக்கொள்ளடி. சித்ரலேகா!'

'இடமில்லை' என்று சித்ரலேகை கூடார்தமாக பதிலளித்தாள்.

மறு நிமிஷம் ஸ்நேகிதர்களின் சேர்க்கையால் ஏற்பட்ட ஆனந்தத்தில் எல்லோரும் மூழ்கியிருந்தார்கள். அப்பொழுது கைவளை யணிந்து கந்தர்வனொருவன் மின்னலை யணிந்த மேகம் போல அங்கு வந்து இறங்கி என்னை உபசரித்தான். தேவராஜனுக்கு விஷயம் பூறாவும் தெறிந்து விட்டதென்றும். மிகவும் நன்றி பாராட்டுகிறாரென்றும் என்னைத் தேவஸபைக்கு அழைத்துவரச் சொன்னாரென்றும் சொன்னான். நான் பதிலாக மரியாதை வார்த்தைகள் சொல்லி தற்காலம் ஸ்வர்க்கம் வர இயலாததைப் பற்றி வருந்துவதாகச் சொன்னேன். அப்சரஸிகள் சித்ராதனுடன் புறப்படத் தயாரானார்கள். சற்று தூரம் சென்றதும் ஊர்வசி,

'அடி என்னுடைய முத்துமாலை இந்தப் புதரில் அகப்பட்டுக் கொண்டது, எடு' என்றாள். அந்த சமயம் என் பக்கம் திரும்பி என்னைப் பார்த்தாள்.

'என்னால் முடியாதம்மா, நன்றாகவல்லவோ மாட்டிக்கொண்டு விட்டது.'

அவர்கள் மறைந்தார்கள். ஆகாசத்தில் ஸ்வப்பனம் காண்பதுபோல் ப்ரமை கொண்டேன். என் ஹிருதயத்தைக் கொள்ளை கொண்டு போய் விட்டாள்.

என்னுள்ளத்தை ஊர்வசி கொண்டுபோய்விட்டாள்; என்னுடலுடன் ஊர் வந்து சேர்ந்தேன்.

ராஜ்ய காரியம் ஓடவில்லை, ராக்காலமும் ஓடவில்லை, என்னை மறந்தேன். அவளை மறக்க முடியவில்லை. என்னூரையும் உறவையும் உதறி அவள் ஊரையும் உறவையும் நாடியது என் மனம்.

பிரிவாற்றாமைக்கு உற்றவரிட முரைத்தல் என்ற தேறுதல் ஒன்று உண்டு. அது தலைமுறை தத்துவமாக வழங்கிவரும் மருந்து. அதை நானும் கைக்கொண்டேன். என் நண்பன் விதூஷகனைக் கூட்டிக்கொண்டு உத்தியான வனத்திற்குச் சென்றேன். என் வாய்ப்பூட்டையுடைத்து

என்னாற்று வெள்ளத்தை ஓடவிட்டேன். என் மாயைக் காதலை மனமிளக உரைத்தேன். ஓங்கிய உடலழகு, புலனைச் சிதற வடிக்கும் சிறு நகை, கலக்கும் கண்கள் இவைகளை ஒவ்வொன்றாக வர்ணித்து வர்ணித்து என் மனத்தீயை வளர்த்தேன். என் நண்பன், பாவம், பிராமணன், – என் ஆர்வத்தால் ஆச்சரிய மடைந்தான். என்னைத் தேற்றத் தெரியாமல் திகைத்தான். நான் கலங்கிக் கதறினேன். ஆ! அந்த சமயம் ஆகாசத்தில் ஊர்வசி 'திரஸ்கரிணீ' என்ற வித்தையால் மறைந்து நின்றுகொண்டு என் கதையை யெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தாள்! ஒரு பூஜை பத்திரத்தில் தன் காதலைச் செய்யுளாக்கி கீழே போட்டாள். அதையெடுத்து வாசித்துப் பரவசமானேன். பின்னாலேயே என் காதலியும் கீழே இறங்கி வந்தாள். சற்று தங்கி என்னை ஆற்றிவிட்டுத் திரும்பிப்போனாள்.

மடையன்! என் நண்பன் சுத்த முட்டாள்! அக்காதற்கடிதத்தை ஊர்வசி வந்த போது அவனிடம் கொடுத்தேன். கஷ்கத்தில் வைத்திருந் திருக்கிறான். ஊர்வசியைக் கண்டதும் 'ஆ' வென்று வாயைத் திறந்து கொண்டு நின்றவன் கடிதத்தை நழுவ விட்டு விட்டான்.

கஷ்டகாலம் பாருங்கள்! அது, என்னைப் பார்க்க வந்த என் ராணியின் கையில் அகப்பட்டு விட்டது. அவள் வெகு கோபத்துடன் என்னிடம் வந்து என்னைக் கடிந்தாள். முதலில் பொய்சொல்லிப் பார்த்தேன். கடிதத்தை என் முகத்தில் விட்டெறிந்தாள். நான் அவள் காலில் விழுந்தேன். என்னை லக்ஷியம் செய்யாது போய்விட்டாள்.

ஊர்வசி திரும்பி ஸ்வர்க்கத்துக்குப் போனாலும் அவள் என்னையே நினைத்துக்கொண்டல்லவா போனாள். இந்திர சபையில் 'லக்ஷ்மி ஸ்வயம் வரம்' என்ற நாடகம் போட்டார்களாம். அதற்கு ஸாஹித்திய மெழுதினவர், ஏற்பாடு செய்தவர் – எல்லாம்–பரதசாஸ்திரியேயாம். ஊர்வசி லக்ஷ்மி வேஷம் தரித்தாள். லக்ஷ்மியின் தோழி அவளைப் பார்த்து 'நீ யாரை காதலிக்கிறாய்?' என்று கேட்கும்போது 'புருஷோத்தமனை' என்று சொல்லவேண்டிய லக்ஷ்மி (ஊர்வசி) 'புரூரவனை' என்று சொல்லிவிட்டாள். உடனே பரதரிஷிக்கு மஹா கோபம் வந்து விட்டது. 'நீ எந்த மனுஷ்யனை நினைத்துக்கொண்டிருந்து அவன் பேரைச் சொல்லி என் நாடகத்தைக் கெடுத்தாயோ அவனிடமே போய் வாழ்' என்று சாபம் கொடுத்தார். பிறகு இந்திரன் முதலான தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி 'சரி உனக்கு அவனிடம் பிறக்கும் பிள்ளையை அவன் என்று பார்க்கிறானோ அன்றே நீ திரும்பி ஸ்வர்க்கத்துக்கு வந்து சேர்வாய்' என்று மறு சாபமும் கொடுத்தார்.

ஏக்கம் என்பது மனதை மட்டுமின்றி உடலையும் எவ்வளவு பாதிக்கு மென்று அப்பொழுதுதான் எனக்குத் தெரிந்தது. எதிலும் மனது செல்ல வில்லை. உடம்பு இளைத்து விட்டதென்று என் நண்பன் சொன்னான். அதற்கு முன் என் அரசி அதைக்கண்டு விட்டாள் போலிருக்கிறது.

இப்பொழுது சொல்வதற்கென்ன? ஏதோ ஊர்வசி என்று பிதற்றிக் கொண்டு திரிந்தேனே ஒழிய என் அரசி காசிராஜ புத்ரியைப் போல, பூலோகத்தில் யாரும் பத்னிகள் இருக்கவே மாட்டார்கள். என் ஸ்திதி யைக் கண்டு பதறிப்போய்விட்டாள். தன் கோபத்தையும், அதற்குக் காரணமான என் செய்கையின் அவமதிப்பையும் உடனே மறந்தாள். இவ்வுலகில் எந்த ஸ்திரீ தன் புருஷனின் திருப்திக்காக தன் நிலைமை யையே மறப்பாள்? என் மேல் அவளுக்கிருந்த கரை கடந்த அன்பு அவளது பெண் குணத்தையே வென்றுவிட்டது.

என்னவானாலும் என்னைத் திருப்தி செய்துவிட வேண்டுமென்று தீர்மானித்துவிட்டாள். அதற்கு அடிப்படையாக மறுபடியும் என்னுடன் பேசுவதற்கான வழியைத் தேடினாள். அதிலும், என்னே அவளுடைய புனித நோக்கம்! சித்திரைப் பௌர்ணமியன்று இரவு 'பிரியானுப் பிரஸாதனம்' என்னும் விரதத்தை தான் 'முகிக்'கப் போகிறதாகவும், அப்பொழுதுதான் சந்திர கிரணங்களை பூஜித்து ஆரதிகொடுக்கும் பொழுது, நான் அங்கு வந்திருக்க வேண்டுமென்றும் கோறி, எனக்கு தாதி மூலம் சொல்லியனுப்பினாள். ஊர்வசி மோகம் கொண்டவனா இருந்த போதிலும் என் அரசியின் செய்தியைக் கேட்டு புளங்காகிதமானேன்.

சரியாக சந்திரோதய காலத்தில் உப்பரிகையில் ஆஜராகி விட்டேன். என் நண்பன் விதூஷகன், சந்திரனைப் பற்றியும் சாப்பாட்டைப் பற்றியும் ஏதேதோ தமாஷாகப்பேசிக்கொண்டிருந்தான். என் மனது மட்டும் தடுமாறிக்கொண்டிருந்தது. எனது தேவியை எதிர்பார்த்துக் கொண்டு அந்த நிலவில் நான் உட்கார்ந்து கொண்டிருந்தேனானாலும் என் மனம் ஊர்வசியை நாடிற்று. 'இச்சமயம் அவள் வந்து என்னை ஆற்றுவாளா?' என்று ஏங்கினேன்.

அதே சமயம் ஊர்வசி சித்ரலேகையுடன் கூட திரஸ்கரிணியால் மறைந்து கொண்டு என்னருகில் வந்திருக்கிறாள்! அப்பூர்ணிமைக்கேற்ற 'அபிஸாரிகா' வேஷத்துடன் ஊர்வசி பிரிவாற்றாமையால் என்னை நாடி வந்து நின்றாள். 'அடி, என் உடை பொருந்தியிருக்கிறதா?' என்றாளாம். 'நான் புரூரவஸாக இருக்கக்கூடாதா என்று வருந்துகிறேன்' என்று சித்ரலேகை பதில் சொன்னாளாம். விதூஷகனுடன் நான் தேவியைப் பாராட்டிப் பேசியதைக் கேட்டு அஸீயை கொண்டு சித்ரலேகையை விளித்தனளாம். அவள் சாதுரியமாக தன் தோழியைத் தேற்றினாளாம்.

சேடிகள் பூஜா திரவியங்களை எடுத்துவர, என் பட்ட மஹிஷி உப்பரிகைக்கு வந்தாள். உப வாஸத்தால் சற்று மங்கிய தேஜஸுடன், ஸ்நானம் செய்து, கூந்தலில் அருகம் துளிர்களை பவித்திர ஸுசகமாக அணிந்து, வெண் பட்டாடை உடுத்து, அந்த விரத சமயத்திற்கேற்ற சில ஆபரணங்களை மட்டும் தரித்து வந்த என் அரசியைக் கண்டு, நான் வாஸ்தவமாகவே பிரமித்துவிட்டேன். விருவிரென்று சந்திர கிரணங்களை

அர்ச்சித்து நிவேதனம் செய்து முடித்தாள். ரோகிணியுடன் கூடின இந்த சந்திரன் சாக்ஷியாக, என் புருஷன் எந்த ஸ்த்ரீயை அபேக்ஷிக்கிறாரோ, அவளை அவர் ஸ்வீகரிப்பதற்கு நான் இடையூறாக இருப்பதில்லை என்று எனக்கு வாக்கு கொடுத்து விட்டு, நான் அசடு தட்டிப்போன முகத்துடன் 'பிரியே இங்கு சற்று இரேன்' என்றதையும் மரியாதையுடன் மறுத்துவிட்டு, வெகு கம்பீரமாக தன் சேடிகளுடன் திரும்பிவிட்டாள்.

அவள் வந்ததும், போனதும்!

இதையெல்லாம் கேட்டுக்கொண்டு நின்ற ஊர்வசி தன் சகியுடன் கீழே இறங்கினாள். பின்னால் வந்து என் கண்களைப் பொத்தினாள். என் நண்பன் வேடிக்கையாக 'யார்' சொல் பார்ப்போம் என்றான்.

'ஊர்வசி தான்!' என்றேன்.

சட்டென்று கைகளையெடுத்து விட்டு என் முன்னே வந்து எனக்கு மரியாதை செய்தாள். அவளையும் அவள் தோழியையும் வரவேற்றேன். உபசார வார்த்தைகள் ஆடினோம். இங்கிதமுள்ள சித்ரலேகை விடைபெற்றுக் கொள்ளலானாள். நான் ஸூர்யனிடம் சென்று சிச்ரூஷை செய்ய வேண்டிய காலம். 'என் தோழிக்கு ஸ்வர்க்க நினைவே அற்றுப் போகுமாறு வைத்துக் கொள்ளுங்கள்' என்றாள்.

ராஜ்ய பாரத்தை மந்திரிகளிடம் ஒப்புவித்துவிட்டு, ஊர்வசியுடன் கந்தமாதன வனத்திற்குச் சென்று, அங்கே இருவரும் கால வரையறியா தவர்கள் போல வசித்தோம். அந்த மாதிரி இடங்களில் அனுபவிக்கப் படுவதல்லவோ சுகம்!

அப்பா! மயக்கம் கொண்ட எங்கள் கண்களின் முன் ருதுக்கள், வர்ணத் திரைகள் போலக் தோன்றித்தோன்றி மறைந்தன. அப்பேர்ப்பட்ட மயக்கம் நிலைக்காதல்லவா?... மழைக்காலம் ஆரம்ப சமயம். ஒருநாள் மந்தாகினி நதியின் மணலில் விளையாடிக் கொண்டிருந்த வித்யாதர கன்னிகையை நான் கொஞ்சம் கூர்ந்து பார்த்துவிட்டேனென்று, அஸீயையால் கோபம் கொண்ட ஊர்வசி, வேகமாக என்னைப் பிரிந்து வனத்திற்குள் சென்றவள் ஸுப்ரமண்யன் தவம் செய்து கொண்டிருந்த 'குமார வனம்' என்னும் பாகத்தில் நுழைந்து விட்டாள். உடனே அவள் அக்கடவுளின் ஏற்பாட்டின் படி ஒரு கொடியாக மாறிப்போய் விட்டாள். அது எனக்குப் பின்னால்தான் தெரியவந்தது.

அவளைத் தேடிக்கொண்டு புறப்பட்டேன். வன வனாந்தரங்களைக் கடந்து, பித்துப் பிடித்தவன் போல பிதற்றிக்கொண்டு சென்றேன். கேவலம் அசேதனங்களை யெல்லாம் 'ஊர்வசியைக் கண்டாயோ?' என்று கேட்டேன்.

இப்பொழுது நினைத்துப் பார்த்தால் சிரிப்பு வருகிறது. அது ஒரு ஜன்னி போலத் தோன்றுகிறது. இயற்கையின் ஒவ்வொரு காக்ஷியும் நிலைக் கண்ணாடிப் போல, அவளது ஒவ்வொரு சாயலை நினைப்

பூட்டியது. எங்கு கண்டாலும் பிரகிருதியில் அவளது லாவண்யம் சிதறிக் கிடந்தது போலிருந்தது.

மின்னலைக் கண்டு அவளது 'கொடி உடலோ' என்று திகைப்புற்றேன் செவ்வண்டுகள் நிறைந்த பச்சைப் புல் தரையைப் பார்த்து அவளது தாவணியோ என்று பிரமித்தேன். செவ்வாழையின் செழிப்பு, மயிலின் விரித்த தோகை, பெண்மானின் மிரண்ட பார்வை – எல்லாம் என் உள்ளத்தைக் குலைத்துவிட்டன. ஊர்வசி கிடைக்கத் தகுந்தவளா? எங்கள் மையலுக்கு இணையுண்டா? என் விரஹம் கட்டற்று விட்ட தென்று நான் விஸ்தரிக்க வேண்டுமா என்ன?

இப்படித் திரிந்து கொண்டிருந்த என் கண்ணில் அகஸ்மாத்தாக ஒரு சிவப்பு ரத்னம் தென்பட்டது. அது பார்வதியின் பக்கத்திலிருந்து சொரிந்த மணியென்றும், அதற்குச் 'சங்க மனீயம்' என்று பெயரென்றும், அது பிரிந்தவர்களைச் சேர்த்து வைக்கும் குணமுடையதென்றும், அதை நான் ஸ்வீகரிக்கலா மென்றும் அங்கிருந்த முனிவர் ஒருவர் கூறினார். அதை எடுத்துக்கொண்டு சுற்றி வரும் பொழுது இயற்கையை மீறிய அழகுடன் கூடித் தோன்றிய ஒரு கொடியைக் கண்டு பரவசமடைந்து விட்டேன். அதை அணுகி கட்டிக்கொண்டேன்! அது ஊர்வசியாக மாறின ஆச்சரியம். உடனே அவளுடன் என் தலை நகருக்குத் திரும்பி விட்டேன்.

இன்பதுன்பங்கள் பகல் இரவு போல் மாறி மாறி வந்து கொண்டே இருக்க வேண்டும் போலிருக்கிறது. ஏதோ 'ஸங்கமனீயம்' என்ற ரத்னத்தின் மஹிமையால் ஊர்வசியை மறுபடியும் கண்டுபிடித்து ஊர் வந்து சேர்ந்தேனே! எண்ணெய் தேய்த்து ஸ்னானம் செய்த ஒருநாள் ஊர்வசி தன் ஆபரணங்களையெல்லாம் கழற்றி ஒரு தங்கத்தட்டில் வைத்து சேடியிடம் கொடுத்து ஸ்னான கிருஹத்திலிருந்து அந்தப்புரத்தில் கொண்டு போய் வைக்கச்சொல்லி கொடுத்தனுப்பியிருக்கிறாள். நடுவழியில் ஆகாசத்தில் பறந்து கொண்டிருந்த ஒரு கழுகு அந்தத் தட்டில் செக்கச் செவேலென்று சூரிய வெளிச்சத்தில் பிரகாசித்த ஸங்கமனீயத்தை மாமிசத்துண்டென்று எண்ணி குபீலென்று இறங்கிப் பாய்ந்து அதைக் கவ்வி எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டது. எல்லோரும் இரைச்சல் போட்டு நான் போய்ப்பார்த்து, என் வில்லை எடுத்து வரச்சொல்லி நான் குறிவைப்பதற்குள் அந்தப் பக்ஷி என் குறிக்கு மீறி போய்விட்டதெனக் கண்டு, அது போய் இளைப்பாறுமிடத்திற்கு அதைத் துடர்ந்து சென்று ரத்னத்தை கிரஹித்து வரச் சொல்லி ஆட்களை அனுப்பினேன்.

நான் முடியாதென்று கைவிட்ட ஒரு இலக்கை இன்னொருவன் குறிவைத்து அம்பெய்து விட்டால் என் மனதெப்படியிருக்கும்? சில நிமிஷங்களுக்கெல்லாம் அம்பு தைத்த அந்தக் கழுகும் ரத்னமும் என்

முன் கொண்டுவரப்பட்டன. மனுஷ்யனுடைய ஸ்பாவம் பாருங்கள், மணி வந்துவிட்டதென்ற சந்தோஷம் மேலோங்கவில்லை. அந்த வில்லனிடம் ஒரு பொறாமை ஏற்பட்டது. யாரென்று விசாரித்தேன் அம்பில் பின்வரும் சுலோகம் எழுதப்பட்டிருந்தது.

ஊர்வசீ ஸம்பவ ஸ்யாயம்
ஜலஸூனோர் தனுர்ப்ருத!
குமாரஸ் யாயுஷோ பறண்:
ப்ரஹர்துர்த் விஷதாயுஷாம்

நான் வாஸ்தவமாகவே பிரமித்துப் போனேன். ஆயுஸ் என்று பெயர் கொண்ட என் புத்திரனின் பாணமா! ஊர்வசியின் மகனா! எனக்குத் தெரியாமல் அவள் அவனை வைத்திருப்பதேன்? என்ற கேள்விகள் கிளம்பி என் மனதைக் குழப்பிக் கொண்டிருக்கும் பொழுதே ச்யவனாச்ரமத்திலிருந்து ஓர் தபஸ்வினி ஒரு சிறுவனுடன் வந்து ஆசார வாசலில் நிற்பதாக தகவல் வந்தது. அவர்களை உடனே உள்ளே அழைத்து வரும்படி உத்தரவு செய்தேன். தாபஸியை பூஜித்து வரவேற்றேன். அவர் என்னை ஆசீர்வாதம் செய்துவிட்டு குழந்தையைப் பார்த்து 'அப்பா குழந்தாய்! உன் தகப்பனாருக்கு வந்தனம் செய்!' என்றாள். என் குழந்தை வில்லைக் கையில் வைத்த வண்ணம் கைகூப்பி வணங்கின காக்ஷியால் நானும் என் நண்பன் விதூஷகனும் பரமானந்த மடைந்தோம். ஊர்வசி ஏதோவொரு காரணார்த்தமாக தன் புத்ரனை ச்யவனரின் போஷணையில் விட்டிருந்ததாகவும், ஸகல வித்தைகளையும் பயின்ற சிறுவன் அன்று ஆச்ரம நியமத்திற்கு விரோதமாக கழுகை அடித்து வீழ்த்திவிட்டதால் ச்யவனர் இவனை தகப்பனிடம் கொண்டு சேர்ப்பி விக்கும்படி தன்னை அனுப்பியதாகவும் தாபஸி சொன்னாள்.

'குழந்தாய்! இவர் உன் தகப்பனாரின் நண்பர், விதூஷகர், பயப் படாமல் நமஸ்காரம் செய் என்றேன்.

'நன்றாயிருக்கிறது எதற்காகப் பயப்படுகிறான்? அவன் ஆச்ரமத்தில் குரங்கைப் பார்த்ததில்லையா, என்ன? என்று வேடிக்கையாகச் சொன்னான்.

அந்த சமயம் ஊர்வசி வந்தாள், தன் புத்ரனைக்கண்டு மெய் மறந்தாள். திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டு அழ ஆரம்பித்தாள். நான் அவளை சமாதானம் செய்து என்ன விஷயமென்று கேட்டதற்கு தனக்கு ஒரு உத்தரவு உண்டென்றும், என்று நான் அவளிடம் உற்பத்தியான என் மகனைக் காண நேரிடுமோ அன்றே அவள் என்னை விட்டுப் பிரிந்து தேவலோகம் போகவேண்டும். அது இந்திரனின் கட்டளையென்றும் சொல்லி துக்கித்தாள்.

என்னே! மழை பெய்கிறதென்று ஒரு மரம் சிலிர்த்து மகிழ்ந்து கொண்டிருக்கும் பொழுது அதன் தலையில் இடி விழுந்தால்! ஆயுஸுக்கு

யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்துவிட்டு காசிக்குச் சென்றுவிடுவதாக தீர்மானித்தேன். அந்த சமயம் தேவேந்திரனால் அனுப்பப்பட்ட நாரதர் என் சபைக்கு வந்தார். நான் அவருக்கு மரியாதை செய்தபிறகு தேவேந்திரன் நான் ராஜ்யத்தை விட்டு கானகமேகும் யோசனை கொண்டு விட்டேன்னென்பதையறிந்து அதைத் தடுப்பதற்காக ஊர்வசி ஆயுள் பரியந்தம் என்னிடமிருக்கலாமென்று அனுமதித்திருக்கிறதாகவும், அது வரப்போகிற தேவாஸூர யுத்தத்தில் நான் தேவர்களுக்கு ஒத்தாசை செய்யவேண்டுமென்பதை உத்தேசித்தே என்றும் அந்த சமாச்சாரத்தை தன் மூலமாக அனுப்பியிருக்கிறேனென்றும் நாரதர் தெரிவித்தார். எல்லோரும் புளகாங்கிதமானோம், நாரதர் தன் கையாலேயே ஆயுஸுக்கு யுவராஜா பட்டாபிஷேகம் செய்தார். ஏதோ அவருடைய ஆசிர்வாதம் இது. எழுதுகிறவரையில் ஒருவித குறைவுமில்லாமல் ஊர்வசியுடனும், ஆயுஸுடனும் விதூஷகனுடனும் என் பட்ட மஹிஷியுடனும் ராஜ்ய பாரம் நடத்தி வருகிறேன். லக்ஷ்மியும், ஸரஸ்வதியும் ஒற்றுமையுடன் பொங்கி, என் பாரதநாட்டை ஸாதுக்களுக்கு இருப்பிடமாக்க வேண்டு மென்பதே என் கோரிக்கை.

●